# என்னுரை

உலகம் தோன்றியது முதற்கொண்டு இன்றுவரை மனிதன் புதிது புதிதாக எதையோ தேடிக்கொண்டுதான் இருக்கின்றான். ஆனால், அவனது தேடுதல் மட்டும் இன்றுவரை முடிவடைந்த நிலையை அடையவில்லை. காரணம் அவன் தன்னிடமிருந்து தொலைத்ததை தேடாமல், வேறு ஏதோ ஒன்றை தேடுவதினால் வந்த நிலைதான் இது.

அப்படி எதைத் தன்னிடமிருந்து தொலைத்தான் என்பதை அறிய அவனுக்கு ஆவல் இருந்தாலும், அதற்கான அறிவையும், வழியையும் தெரிந்து கொள்ளாததுதான் அவனது தேடுதல் நீண்ட காலமாகத் தொடர்கின்றது.

மனிதன் தன் தேடுதலின் உண்மை நிலை அறிந்து, அவனது அறியாமைக்கு காரணம் கண்டு, அவனை மிக எளிதாகவும், காலதாமதமின்றி அதைக் கண்டு கொள்ளவும் அவனுக்கு தன்னுடைய சுய அறிவைத்தூண்டி, சரியான பாதையில் சென்றால் தான் தொலைத்ததை கண்டறியலாம் என்ற சாதாரண



நடைமுறை வாழ்க்கையை இந்த நூலின் வாயிலாக ஒரு அறிமுகம் போல கொடுக்கப்படுகின்றது.

இந்த புத்தகத்தைப் படித்து அனைவரும் பயன் பெற எல்லாம் வல்ல அந்த இறைவனே அருள் புரியட்டும். எங்கும், எப்பொழுதும், எல்லோருக்கும் சந்தோஷம் நிறையட்டும்! சாந்தி நிலவட்டும்!

ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!

**சுவாமி பிரபஞ்சநாதன்**

# பொருளடக்கம்


| வரிசை எண் | பொருள் | பக்க எண் |
|---|---|---|
| 1. | பிரபஞ்சமும் பிரம்மமும் | 6 |
| 2. | ஐந்து பூதங்களும், உயிர்களின் தோற்றமும் | 10 |
| 3. | உணவுச்சக்கரமும், உணவு உற்பத்தியும் | 13 |
| 4. | மனிதனின் உணவும், குணமும் | 17 |
| 5. | தன்னை அறியும் அறிவு | 21 |
| 6. | மனிதனும், மிருகமும் | 25 |
| 7. | இறைவனைப் பார்க்கலாம் | 28 |
| 8. | அணுவுக்குள் அணுவானவன் அவன் | 31 |
| 9. | அனைத்தும் அவனே | 34 |




# எல்லாம் அவன்

## 1. பிரபஞ்சமும், பிரம்மமும்

எல்லையற்ற இந்த பிரபஞ்சம் பார்வைக்கு மிக நேர்த்தியாகவும், காண்பதற்கு இந்த இரண்டு கண்கள் போதாதது போலவும் காணப்படுகின்றது. ஆனால், உண்மையில் காணப்படுகின்ற காட்சியும், காண்பவனும் ஒன்றுதான் என்றால் நம்மால் நம்ப முடிகின்றதா?

இந்த பிரபஞ்சம் தன்னை பல வகைகளில் வெளிப்படுத்தி, வெளிப்பட்ட தன்னிலிருந்தே தன்னை ஒரு தனித்தனி அம்சமாக இயக்கிக் கொண்டிருக்கின்றது.

அதாவது, தன்னையே பயன்படுத்தி தன்னாலேயே பார்ப்பதும், தன்னாலேயே கேட்பதும், தன்னாலேயே நுகர்வதும், தன்னாலேயே சுவைப்பதும் மற்றும் உணர்வதும் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது. இந்த செயல்கள் உயிரினங்களுக்கு உயிரினம் வேறுபட்டாலும்,

அவைகள் தன்னுள்ளே உள்ள அந்த தனித்துவம் வாய்ந்த ஒரு மையத்திலிருந்துதான் செயல்படமுடியும் என்பதே உண்மை.

பிரபஞ்சத்தின் படைப்பில் மண்ணிலிருந்து மகத்தான மனிதன் வரை ஒவ்வொன்றும் அந்த மையத்தை மையமாக வைத்தே இயங்குகின்றன. இருப்பு நிலையில் இருக்கவும் செய்கின்றன.

அந்த மகத்தான மையமே மகாத்மாவாக எங்கும், எதிலும் நிறைந்துள்ளது. அந்த மகாத்மாவே பிரபஞ்சத்தில் காணும் ஒவ்வொரு ஜடப்பொருளிலும், உயிர்ப்பொருளிலும் ஆத்மாவாக மையம் கொண்டு அவைகளை வெளிப்படுத்திக்கொண்டிருக்கின்றது.

ஆக, ஒன்றே ஆன அந்த பரமாத்மா தன்னை பல வகைகளில் பலவிதமாக இந்தப் பிரபஞ்சத்தில் பரவ விட்டுள்ளது என்பதை அறியவேண்டும்.

ஆம்! நாம் வசிக்கும் இந்த உலகம் பிரபஞ்சத்தின் ஒரு பகுதித் தோற்றமே. இந்த உலகமும், உயிரினங்களும் இறைவனிலிருந்து வேறுபட்டவை அல்ல என்ற உண்மையை அறிந்தால், இந்த மனித உடலை விட்டு உயிர்



போகும் போது மீண்டும் தற்பொழுது மனிதனாகப் பிறந்த நாம் நமக்கு கிடைத்த ஆறாவது அறிவின் பயன்பாட்டால் மீண்டும் வேறு பிறவி எடுக்காமல் பிரபஞ்சத்தில் கலந்து விட முடியும். அதாவது அந்த இறைவனுடன் இரண்டற கலந்து விட முடியும். பிறவிப்பெருங்கடலை கடந்து கரை சேரலாம்.

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார். -** திருக்குறள்

இந்த பிரபஞ்ச பேரறிவை அறிந்து கொள்ள மனிதன் தன்னுடைய படைப்பின் சிறந்த தன்மையான மற்ற உயிரினங்களுக்கு கொடுக்கப்படாத ஆறாவது அறிவை பயன்படுத்தி ஆராய்ந்து பார்க்க வேண்டும். இல்லையென்றால் மனிதர்களாகிய நாம் மனிதனாகப் பிறந்தும், ஆறறிவு பெற்றிருந்தும் பயன் இல்லாமல் போய்விடும் என்பதே நிதர்சனமான உண்மையாகும்.

பிரம்மம் ஒன்றுமில்லாதது, செயலற்றது என்று பலரும் எண்ணுகின்றனர். இது மிகவும் தவறானது, அந்த பிரம்மத்திடமிருந்துதான் அனைத்தும்

தோன்றியது, அதனுள்ளேயே அனைத்தும் இயங்குகின்றது.

உதாரணமாக, கடலை நாம் காண்கின்றோம். அந்த கடலில் தோன்றி மறைகின்ற கடல் அலைகளையும், கடல் நுரைகளையும் நாம் கவனிக்கத்தவறுவதில்லை. அந்த கடலில் தோன்றி அந்த கடலிலேயே மறையும், அலைகளையும், நுரைகளையும் நாம் கடலுடன் சேர்த்து மிகப்பெரிய கடலாகத்தான் பார்க்கின்றோம். கடலில் தோன்றுகின்ற அலைகள் கடலில் தோன்றி, கடலின்மேல் அசைந்து, கடலில் முடிவடைகின்றது.

அதுபோல, பிரபஞ்சத்தில் உள்ள மிகச்சிறிய பொருள்களிலிருந்து மிகப் பெரிய கோள்கள், விண்மீன்கள், சூரியன்கள், சந்திரன்கள் மற்றும் பூமியில் காணப்படுகின்ற அனைத்தும், பிரபஞ்சத்திலிருந்து தோன்றி, அதனுள் இயங்கி, அதனுள்ளேயே முடிவடைகின்றது.

நீரில் கலந்துவிட்ட உப்பை எப்படித் தனியாக பிரித்து காணமுடியாமல் அந்த நீர் முழுவதும் உப்பாக அறிகிறோமோ, அதுபோல பிரபஞ்சத்தில் கலந்துவிட்ட பிரம்மத்தை தனியாக பிரித்து காணமுடியாமல் அனைத்தையும் பிரம்மமாகவே காணமுடியும்.



இந்த பிரபஞ்ச நியதியை மாற்றும் வல்லமை சாதாரண உயிரினங்கள் முதற்கொண்டு அறியாமையில் உள்ள மனிதன் வரை சாத்தியம் இல்லை.

## 2. ஐந்து பூதங்களும், உயிர்களின் தோற்றமும்

இந்த பிரபஞ்சத்தில் உள்ள ஐந்து பூதங்களான ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மற்றும் நிலம் போன்றவைகளையும், விண்மீன்களையும், சூரிய சந்திரன்களையும், மற்ற கிரகங்களையும், அந்த கிரகங்களில் வசிக்கும் பல்வேறு உயிரினங்களையும் விஞ்ஞானத்தின் துணை கொண்டு அறிய ஆவல்படும் மனிதன், மெய்ஞ்ஞானத்தின் ஆற்றலை மறந்து போனதுதான் இன்றைய துரதிர்ஷ்டம்.

விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்புகளின் எல்லை என்பது இன்று வரை ஒரு கட்டுப்பாட்டுக்குள்தான் இருக்கின்றது, காரணம் எவ்வளவோ புதிய, புதிய கண்டுப் பிடிப்புகள் வந்து விட்டாலும், வேற்று கிரகங்களுக்கு மனிதன் சென்று விட்டு வந்தாலும், இந்த உயிரினங்களின் பிறப்பு, இறப்பு இரகசியத்தையும், பிரபஞ்ச மாற்றத்தையும் இதுவரை விஞ்ஞானம் அறியவில்லை என்பதுதான் அறிவியல் உண்மை.

ஆனால், அவைகளை இந்த பூமி என்ற கிரகத்தில் இருந்துக்கொண்டு, அறிந்துக் கொண்ட மெய்ஞ்ஞானம் பெற்ற மாமனிதன் மற்ற உயிரினங்களிலிருந்து, ஏன் சராசரி மனிதனில் இருந்து கூட அறிவினால் வேறு பட்டவன் ஆவான்.

இத்தகைய இந்த மாமனிதனின் பிரபஞ்சப் பேரறிவின் முன்னால், ஓரறிவு படைத்த உயிரினங்கள் முதற்கொண்டு ஆறறிவு படைத்த மனிதன் வரை **"அறிவு"** என்ற விஷயத்தில் வேறுபடுகின்றனர்.



மேலும் இங்கு கண்ணிற்கு தெரிகின்ற இந்த உலகமும் மற்றும் தெரியாத அனைத்தும் ஐந்து பூதங்களினால் ஆன இந்த உடலைக்கொண்டு ஐந்து புலன்களினால் **"நான்"** என்று அறிய முடிகின்றது என்பதை மனிதர்களாகிய நாம் மறுக்க முடியாது.

**"பரமாய சக்தியுள் பஞ்சமா பூதம்**

**தரம் மாறித் தோன்றும் பிறப்பு" -** ஔவையார்

ஆனால் மனிதன் எவ்வாறு, எந்த நிலையில், ஐந்து பூதங்களை உணர்ந்து கொண்டானோ, அவைகளை நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற நிலையில் ஐந்தாக வரிசைப்படுத்தி விட்டான். இந்த ஐந்து பூதங்கள் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் ஒன்று கூடி, காலங்களின் மாற்றங்களுக்கு ஏற்றவாறு அனைத்து உயிரினங்களும் தோன்ற காரணம் ஆயின. ஒன்றிலிருந்து மற்றொன்றாக மாற்றம் அடைகிறது. அதாவது ஒன்று அதன் இயல்பில் மாற்றம் அடைந்து மற்றொன்றாக உருமாற்றம் அடைகிறது.

இதனையே அவ்வையார் தரம் மாறுதல் என்கிறார்.

தரம்மாறுதல் என்றால் அதன் இயல்பில், அமைப்பில், உருவத்தில் என்று பல்வேறு தரப்பட்ட நிலைகளில் மாற்றம் அடைகின்றது என்று பொருள்.

இறைநிலையில்தான், இயக்க நிலையாகிய பிரபஞ்சம், பிரபஞ்சத்தின் கூட்டாகிய ஐந்துபூதங்கள், ஐந்து பூதங்களின் கூட்டாகிய உயிரின மாற்றம், ஆகியவை அடங்கி இருக்கிறது.

இறைநிலை என்று சொல்லப்படுகின்ற பரம்பொருள், அனைத்தையும் தன்னுள் அடக்கி வைத்து இருக்கிறது. காலம் வரும் பொழுது வெளிப்படுத்துகின்றது.

## 3. உணவுச்சக்கரமும், உணவு உற்பத்தியும்

இவ்வாறு, அனைத்து உயிரினங்களின் உடல்கள் இந்த ஐந்து பூதங்களினால் உருவாகியிருந்தாலும்,



இந்த உடலை மேலும் வளர்க்க உணவு இன்றியமையாதது ஆகின்றது.

ஆக, அனைத்து உடலையும் இந்த உணவுதான் வளர்க்கின்றது என்கின்ற போது, அந்த உணவு என்பது எது என்று சிந்தித்து பார்த்தோமானால், ஒரு உடலை வளர்க்க இன்னொரு உடல் உணவாக உட்கொள்ளப்படுகின்றது என்பது நன்கு புலப்படும். மேலும் அந்த உடலை உணவாக உட்கொள்ளும் மற்ற உயிரினங்களும், தங்களின் ஓரறிவு முதல் ஆறறிவு என்ற தங்களது அறிவுக்கு உட்பட்டே அதனதன் உடல் அமைப்புக்கு ஏற்ற உணவைத் தேர்ந்தெடுக்கின்றன.

உதாரணமாக, மண்ணையும், நீரையும் உணவாக உட்கொள்ளும் தாவரங்களை, தங்களது உணவாக பூச்சி, புழுக்கள் உட்கொள்கின்றன. இந்த பூச்சி, புழுக்களை பல்லி, பச்சோந்தி போன்றவைகள் உணவாக உட்கொள்கின்றன. இந்த பல்லி, பச்சோந்தி போன்றவைகளை பறவைகள் உணவாக உட்கொள்ளுகின்றன, இந்த பறவை, மிருகம் போன்ற மாமிசங்களை மற்ற மிருகங்கள் உணவாக உட்கொள்ளுகின்றன. மேலும், இந்த மிருகங்கள்,

பறவைகள், மற்றும் தாவரங்களையும் இந்த மனிதர்கள் உணவாக உட்கொள்ளுகின்றனர்.

முடிவில் இந்த மனிதர்கள் முதற்கொண்டு அனைத்து உயிரினங்களையும் மீண்டும் மண் உணவாக உட்கொள்கின்றது. இப்படி, இந்த உணவுச் சக்கரம் ஒரு தொடர் சுழற்சியில் சுழன்றுக் கொண்டிருப்பதனை கூர்ந்து கவனித்தால் நமக்கு நன்கு புலப்படும்.

இந்த உணவுச்சக்கரம் இயற்கையின் நியதியாக இருந்தாலும், மனிதன் தன்னுடைய அறிவை சரியான விதத்தில் பயன்படுத்த தவறிவிட்டதினால் இன்றைய உணவு மாற்றங்களை நாம் காணமுடிகின்றது.

இதில் எதிர்கால சந்ததிகள் வருத்தப்பட போகின்ற விஷயம் என்னவென்றால் மரபணு மாற்றம் செய்யப்பட்ட உணவுகள் அதிகமாக மக்களிடம் அறிமுகப்படுத்தப் பட்டு வருவதுதான். இத்தகைய காய்கறிகள், பறவைகள், விலங்குகள், மற்றும் இரசாயண உணவுகளை அதிகம் விரும்பி உண்பதினால் மனிதன் பல்வேறு நோய்களுக்கு



ஆட்பட்டு, உடலும், மனமும் பாதிக்கப்பட்டு தன்னை அறியாமல் விரைவாக மரணத்தை தழுவுகின்றான்.

இயற்கையின் உணவுச்சக்கரத்தை அறியாத மனிதன் தன்னுடைய பராக்கிரமத்தினால் இயற்கை விதித்த விதி முறைகளை மீறி அந்த உணவுகளை தன்னுடைய சுய நலத்திற்காக மாற்றத்திற்கு உட்படுத்தி உட்கொண்டு, தன் குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்கும், மற்றவர்களுக்கும் அந்த உணவுப்பழக்கத்தை கட்டாயப்படுத்தி புகுத்தி, தானும் கெட்டு, மற்றவர்களையும் கெடுத்து எதிர்கால மனித சமுதாயத்திற்கும் மற்ற உயிரினங்களுக்கும் பாதகம் விளைவிக்கின்றான்.

இத்தகைய மோசமான நிலைக்கு மனிதன் உட்பட்டதற்கு காரணம் அவன் தன்னைப்பற்றி அறிந்து கொள்ள முடியாமல் போனதுதான் காரணம் ஆகும்.

தான் உண்ணும் உணவினாலேயே தன்னுடைய உடலும், மனமும் வளர்கின்றது என்பதை மனிதன் இன்னும் அறியவில்லை. தன்னுடைய நாவின்

சுவைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து, இன்று உணவுகளை சமைத்து உண்பதிலும், தன்னுடைய சுய நலத்திற்காக தரம் கெட்ட உணவுப் பொருட்களை விற்பனை செய்வதிலும் இருந்தே மனிதன் இன்றுவரை தன்னையும் தன்னை சார்ந்த மற்ற உயிரினங்களின் தேவைகளையும் அறியாமல் செயல்படுகின்றான் என்பது நன்கு தெரிகின்றது.

## 4. மனிதனின் உணவும், குணமும்

பொதுவாக ஒவ்வொரு உயிரினங்களின் உடல் வளர்ச்சிக்கும் உணவு மிக முக்கிய பங்கு வகிக்கின்றது. அவைகள் உட்கொள்ளும் உணவும் மாறுபடுகின்றது.

இதில் ஆதி மனிதனாக மிருகங்களை வேட்டையாடி, நாகரிகமற்ற முறையில் இனப்பாகுபாடு இன்றி மிருகம் போலவே வாழ்ந்த மனிதன் தன்னுடைய மரபணுக்களின் தாக்கத்தால்



இன்றுவரை சில நேரங்களில் மிருகம் போலவே வாழ்கின்றான்.

இதில் மனிதன் தன்னுடைய அறிவு முதிர்ச்சியால் அன்பு, கருணை, பாசம், ஈகை, சம உரிமை என நாம் சொல்லும் எத்தனையோ விஷயங்களை இன்று மனிதன் உருவாக்கிக் கொண்டுவிட்டாலும் அதில் அவன் முழுமை அடையவில்லை.

சாதாரண மனிதன் ஒரு மாமனிதனாக உருவாக அவனது மனமும், குணமும் பக்குவப்பட வேண்டும். அப்படிப்பட்ட பக்குவத்தை அவனுக்கு அனுபவம் என்ற அறிவு கொடுக்கும்.

இவ்வாறு மனிதன் அனுபவங்களைப் பெற அவனது செயல் முக்கிய பங்கு வகிக்கின்றது. அவனது செயலை அவனது மனம் தீர்மானிக்கின்றது. அவனது மனதை, அவன் உண்ணும் உணவு முடிவு செய்கின்றது. அவனது மனதைப் பொருத்தே அவனது குணம் அமைகின்றது.

இதில் நாம் கவனிக்க வேண்டியது என்னவெனில், நாம் உண்ணும் உணவைப் பொருத்தே நம் குணாதிசயங்கள் இருக்கும்.

அந்த குணங்கள் முறையே அமைதி, ஆர்ப்பாட்டம் மற்றும் சோம்பல் என மூன்று விதமான குண நிலையை மனிதன் பெறுகின்றான்.

நன்கு வேகவைக்கப்பட்ட காய்கறிகள், கீரைகள், சிறு தானியங்கள் மற்றும் பழங்களை உணவாக உட்கொள்ளும் மனிதன் மிகவும் சாந்தமாக அமைதியான மன நிலையில் காணப்படுவான்.

மிருகம் மற்றும் பறவைகளின் மாமிசங்கள், அரை வேக்காடு உணவுகள், அதிக காரம், உப்பு, புளிப்பு சுவையை உண்ண விரும்பும் மனிதன் எப்பொழுதுமே எதையாவது செய்து கொண்டே இருக்க வேண்டும் என்று நினைப்பான், ஒரு இடத்தில் ஒழுங்காக உட்கார்ந்து செயல் புரிய முடியாத ஆர்ப்பாட்டமான மன நிலையில் அதிகம் காணப்படுவான்.

அளவுக்கு அதிகமான உணவுகளை உண்பது, பதப்படுத்தி வைக்கப்பட்ட உணவுகளை உண்பது,



சமைத்து மீதமான உணவுகளை வைத்திருந்து மறு நாள் உண்பது, மைதாவினால் செய்யப்பட்ட உணவுகளை அதிகம் உண்பது போன்ற தவறான உணவுப்பழக்கம் கொண்ட மனிதன் சோம்பேறி மன நிலையில் காணப்படுவான்.

ஆக, இந்த உடலை வளர்க்கப் பயன்படும் உணவுப்பழக்கம் ஒரு மனிதனின், மனத்தையும், குணத்தையும் எவ்வாறு மாற்றி விடுகின்றது என்பதை அறியமுடிகின்றது.

இவ்வாறு மனமும், குணமும் மாற்றமடைய காரணமான இந்த உணவு முறைகளை சரிப்படுத்தி, நெறிப்படுத்தி உண்ண கற்றுக்கொள்ள வேண்டும். உணவு விஷயத்தில் இது சரி, அது தவறு என்று மற்றவர்களுக்கு எளிதாக அறிவுரை கூறும் மனிதன் முதலில் தன்னுடைய தவறை உணர்ந்து, அதை திருத்திக்கொள்ள முயலவேண்டும். தன்னை அறிந்து மாற்றிக்கொள்ளத் தயாராகவேண்டும்.

**சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்**
**சொல்லிய வண்ணம் செயல். —** **திருக்குறள்**

# 5. தன்னை அறியும் அறிவு

**தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை**
**தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்**
**தன்னை அறியும் அறிவை அறிந்தபின்**
**தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே -** திருமந்திரம்.

தனது ஐம்புலன்களினால் உலகப் பொருட்களை அறிவதையே ஒருவன் அறிவு என்று நினைக்கின்றான். அறிகின்ற அந்த அறிவு, அதற்கு எதிரான அறியாமை ஆகிய இந்த இரண்டுமே தோன்றுவதற்கு காரணம், தனக்குள்ளே பேரறிவு என்ற ஒன்று இருப்பதினால்தான் என்பதை அவன் அறியாததுதான்.

ஆனால் அந்த அறிவைப் பயன்படுத்தி தன்னை விட்டு, தனக்கு வேறான உலகையும், தன்னைத் தவிர இந்த உலகியல் பொருட்களை அறியும் ஆர்வமும் உண்டாவது ஏன்? என்று யோசித்துப் பார்க்கவேண்டும் .



இவைகளையெல்லாம் அறிய விரும்புகின்ற நான் உண்மையில் **‘நான்’** அல்ல. அறியபடுகின்ற உலகம் உண்மையில் உலகம் அல்ல. இந்த இரண்டையும் அறிகின்ற, தன்னையும் தனக்கு வேறான உலகையும் அறிகின்ற அவனே **‘நான்’**. இந்த நானே அவன்.

அறியும் தன்னை அறிந்துகொள்ளபவன், இந்த அறிவு - அறியாமையின் உண்மையை தெரிந்து கொண்டால் அடுத்த நிமிடமே ஆத்மானுபவம் உண்டாகி இந்த இரண்டையும் அழித்து விடுகின்றான்.

மனிதர்கள் மிருகங்களைப் போலவே அறியாமையினால் தன்னை இந்த உடலாக நினைத்து, இந்த உடலுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கின்றார்கள்.

இந்த மண்ணிற்கு உணவாகப் போகின்ற உடலைப் பராமரிப்பதில் அதிக கவனம் செலுத்துகின்றனர். தன் உடலைப் போன்றே மற்றவர்களின் உடலை பெரிதாக எண்ணி பெருமிதம் கொள்கின்றார்கள்.

இதில் முக்கியமாக நாம் கவனிக்க வேண்டியது இவற்றையெல்லாம் அறிந்து கொள்ள நம்முடைய அறிவு மிக முக்கியம். மனித உடல் மட்டும் வளர்ந்தால் போதாது, அவனது அறிவும் வளரவேண்டும்.

அறிவு என்பது அனுபவம் என்று ஏற்கனவே பார்த்தோம். ஆக நம்முடைய அனுபவம் என்பது நாம் செய்யும் செயலை சார்ந்தது என்பதையும் அறிந்தோம். செய்யும் செயல் நம்முடன் பழகுகின்ற மற்றவர்களின் வழி காட்டுதல்களைச் சார்ந்தது.

இதில் முக்கிய பங்கு வகிப்பவர்கள் நம்முடைய தாய், தந்தை மற்றும் நமக்கு கல்வி கற்பிக்கும் ஆசான். இவர்கள் ஒரு மனிதனுக்கு சரியானபடி கிடைத்து விட்டால் அவனது வாழ்க்கை மிகுந்த உற்சாகமான மன நிலையுடன் கூடிய ஒரு அமைதியான வாழ்க்கையாக மாறிவிடும்.

இளமையில் அறிவு முதிர்ச்சி பெறாத மனிதன் இவர்களைப் போன்ற சரியானவர்களின் வழிகாட்டுதலில் மிக உயர்ந்த மா மனிதனாக மாறுகின்றான்.



அதுவே, அவனுக்கு கிடைத்த தாய், தந்தை அறிவில் சிறப்பாக இல்லையென்றாலும், கல்வி கற்கும் பொழுது கிடைத்த நல்ல ஆசானின் அறிவுரைகளையும், நல்ல நண்பர்களின் அறிவுரையாலும் அவனது மனமும், குணமும் மாமனிதனுக்கு தேவையானதாக மாறிவிடும்.

இதிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியது என்னவெனில், ஒருவரது உணவுப்பழக்கங்களை வைத்தே, அவரது மனநிலை மற்றும் குணம் இவைகளை அறியலாம். மேலும் ஒருவரது மனமும், குணமும் எதன் அடிப்படையில் உள்ளதோ, அதுபோலவே, நமக்கு அவர் கூறும் அறிவுரையும் இருக்கும். அவரது செயலும் அதற்கேற்றவாறு இருக்கும். இதிலிருந்து நாம் அவரை எப்படிப்பட்டவர் என்பதை நன்கு அறிந்து கொள்ளலாம்.

ஒரு மனிதனின் அறிவு எந்த விஷயத்தைச் சார்ந்து, எந்த அளவிற்கு முதிர்ச்சி அடைகின்றதோ அது போலவே அவனது சொல்லும், செயலும் காணப்படும்.

ஒருவன் தன்னை அறியும் அறிவு என்பது அவனை அவன் சுய பரிசோதனைக்கு ஆழ்ந்து உட்படுத்திக் கொள்ளும் போது வெளிப்படும். அதாவது மனிதனாகிய நானும், மற்ற உயிரினங்களும் எந்த விதத்தில் மாறுபடுகின்றோம் என்பதையும், செயல்பாடுகளில் மனிதனாகிய நான் மிருகத்திடமிருந்து எந்த வகையில் மாறுபட்டு காணப்படுகின்றேன் என்பதையும் ஆராயவேண்டும்.

## 6. மனிதனும், மிருகமும்

ஒரு மிருகத்தைப் போன்றே மனிதனும் உணவு உட்கொள்கின்றான், பிறகு மலம், சிறுநீர், விந்து போன்றவைகளை வெளியேற்றுகின்றான். அவைகளைப் போன்றே தூங்குகின்றான். மிருகங்களைப் போன்றே சிற்றின்பத்தில் ஈடுபட்டு, இவனும் குழந்தைகளைப் பெற்றுக்கொள்கின்றான். மிருகங்களை விட கேவலமாக எதற்கெடுத்தாலும் சண்டை போடுகின்றான்.



மிருகங்களாவது உணவை மட்டுமே சேமிக்கும். ஆனால் மனிதன் அவைகளை விட அதிக ஆசையினால் பொன், பொருள், மற்றும் பணம் இவைகளை அதிக அளவில் சேமிக்கின்றான். இத்துடன் பதவி ஆசை வேறு அவனை படாத பாடு படுத்திவிடுகின்றது. முடிவில் மிருகம் போன்றே மரணத்தை தழுவுகின்றான்.

இதில் மனிதன் எந்த விதத்தில் மற்ற உயிரினங்களிலிருந்து வேறுபடுகின்றான்? அந்த வேறுபாட்டை அவன் நிச்சயமாக உணரவில்லை. ஆக அவன் தன்னை அறியும் அறிவை வளர்க்க தவறிவிட்டான். பிரபஞ்சத்தின் கொடையாக கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவைப் பயன்படுத்த தவறிவிட்டான். எதையும் ஆராய்ந்து அறியும் அறிவே நல் அறிவு என்பதை மறந்துவிட்டான்.

**“எதை அறிந்து கொண்டால் வேறு எதையும் அறியத்தேவை இல்லையோ அதுவே அறிவு எனப்படும்”**

அந்த பேரறிவை அறிவதே ஞானம் ஆகும். எந்த ஒன்றைப் பற்றிய தெளிந்த அறிவு இருக்கின்றதோ, அதில் அவனுக்கு ஞானம் என்ற தெளிவு இருக்கும். தன்னைப் பற்றிய தெளிந்த அறிவு உடையவன் மெய்ஞ்ஞானி ஆகிறான். அவனையே **“ஞானி”** என்றழைக்கிறோம்.

ஆகவே ஒரு மெய்ஞ்ஞானி என்பவன் எது மெய், எது பொய் என்பதில் மிகத்தெளிவாக இருப்பான். இந்த மெய்யை (உடலை) பற்றிய தெளிந்த அறிவை உடையவன் மெய்ஞ்ஞானி என்றால் அது மிகையாகாது.

உண்மையிலேயே இந்த மெய் என்பது பொய். ஆம், இந்த உடல் நிலையற்றது. என்றாவது ஒரு நாள் இது அழிந்து விடும். அனைத்து உயிரினங்களுக்குமே இதுதான் நடக்கின்றது.

ஆனால், மனிதன் ஆறறிவு கொண்டவனாக இருந்தும், அவன் இந்த உடலை கடந்த ஏதோ ஒன்று இருக்கின்றது, அதுதான் அனைத்தையும் இயக்குகின்றது என்பதை அறியாமல்



அவதிப்படுகின்றான். அப்படிப்பட்ட அது எது? என்று விடை காண மறுக்கிறான்.

அதுதான் இந்த பிரபஞ்சத்தை படைத்து மண்ணிலிருந்து மனிதன் வரை இயக்கிக் கொண்டிருக்கின்றது. அதைத்தான் ஆத்மா என்றும், பரமாத்மா என்றும், இறைவன் என்றும், பரம்பொருள் என்றும், பிரம்மம் என்றும் அழைக்கின்றோம்.

## 7. இறைவனைப் பார்க்கலாம்

இறைவனைப் பார்க்க முடியுமா? என்பது பலரது சந்தேகம். இதில் வேடிக்கையான விஷயம் என்னவென்றால் நாம் தினம் தினம் இறைவனைப் பார்த்துக்கொண்டுதான் இருக்கின்றோம். ஆனால், அவர் எப்படி இருப்பார் என்பது தெரியாமல், நம்முடைய கற்பனைக்கு ஏற்றவாறு ஒரு உருவத்தை வடித்துக்கொண்டு அந்த உருவத்தில் இறைவன்

காட்சி அளிக்க வேண்டும் என்று நினைப்பதுதான் அறியாமை என்கின்றோம்.

இந்த அறியாமையில் இருந்து மனிதன் ஆறாவது அறிவுக்கு வரவேண்டும். பிரபஞ்சத்தின் படைப்பில் காணப்படுகின்ற அனைத்து உயிரினங்களும் இறை அம்சமே. ஆக தினந்தோறும் இறைவனைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்.

எப்படி என்றால், உப்பை நீரில் போட்டு வைத்து அது கரைந்தபின், நீரில் போட்ட உப்பைக்காண முடிவது எளிதல்ல. ஆனால் நீரில் மேல் பாகத்தையோ, நடுப் பாகத்தையோ, அடிப் பாகத்தையோ உண்டுப் பார்த்தால் அது உப்பாகவேயிருப்பது தெரியும். ஆக அனைத்து நீரும் உப்பின் அம்சமாகவே மாறிவிட்டது.

அதுபோல, பிரபஞ்சமாகவே மாறிவிட்ட இறைவனை தனியாக பிரித்து காணமுடியது. எங்கும் எதிலும் நீக்கமற நிறைந்த இறைவனை தனியாக பிரித்து அறியவும் முடியாது. இந்த அறிவை அடைந்தவனே அறிவாளி ஆவான். இந்த



ஞானத்தை அடைந்தவன் எவனோ அவனே ஞானி ஆவான்.

அதாவது, சாதாரண புல் முதற்கொண்டு மனிதன் வரை அனைத்தினுள்ளும் அந்த ஆத்மனே ஆட்சி செய்கின்றான். உண்மையில் இங்கு **“நான்”** என்பது ஆத்மனே ஆகும். ஆத்மன் என்பது அந்த பரமாத்மனே ஆகும்.

எங்கும், எப்பொழுதும், நீக்கமற நிறைந்த பரம்பொருளை நீ காணவில்லை என்று தேடினாலும், அது எங்கும் எப்பொழுதும் இருக்கவே இருக்கிறது.

அணுவுக்குள் அணுவான, எக்காலத்திலும் அழியாத, முக்காலமும் உணர்ந்த அந்த சூட்சும மெய்ப்பொருளை அறிந்து கொண்டவன் அதை ஆத்மா, பரமாத்மா, இறைவா, சிவா, விஷ்ணு என எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளலாம். வழிபாடு செய்யலாம், பெயரில் ஒன்றும் இல்லை.

அந்த அதி சூட்சுமப்பொருள் தன்னுள்ளேயும், வெளியேயும் நிறைந்துள்ளது என்பதை அறிந்து, **“எனக்குள் நீ, உனக்குள் நான்”** என்ற மனநிலைக்கு

வந்து விட்டால், அவனே மாமனிதன் ஆகின்றான். எங்கும் இறைவனைப் பார்க்கின்றான்.

## 8. அணுவுக்குள் அணுவானவன் அவன்

இதில் நாம் அறிந்து கொள்ளவேண்டிய பேருண்மை என்னவென்றால், ஆலம்பழம் ஒன்றைப்பிளந்தால் அணுவடிவான விதைகள் காணப்படுகின்றன. அவ்விதைகளில் ஒன்றைப் பிளந்தால் ஒன்றும் காணப்படுவதில்லை. ஆனால் அப்படி காணப்படாத அந்த சூட்சுமப் பொருளிலிருந்தே பெரிய ஆலமரம் உண்டாகி நிற்கிறது.

அப்படி அணுவுக்குள் அணுவான காணப்படாத அந்த சூட்சுமப் பொருளிலிருந்தே அந்த பரப்பிரம்மம், இந்த பிரபஞ்சமாக உண்டாகி நிற்கிறது.

அப்படி பார்க்கையில், நீரில் கலந்த உப்பினால், அந்த நீர் முழுவது உப்புச்சுவையாகவே



மாறி விட்டது போல, பிரம்மம் இந்தப் பிரபஞ்சமாக மாறியதால் இந்த பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் பிரம்மமாகவே இருக்கும் என்பதில் எந்தவித ஐயமும் தேவையில்லை.

அப்படி இந்த பிரபஞ்சமே பிரம்மமாகவே இருப்பது உண்மையென்றால், இந்த பிரம்மம் எங்கு இருந்து தோன்றியது? இந்த பிரபஞ்சத்தையும், அதில் உள்ள அனைத்தையும் படைக்க மூலப்பொருளை பிரம்மம் எங்கு இருந்து எடுத்தது போன்ற கேள்விகள் எழுவது இயல்பே.

இதனை நாம் எப்படி அறிந்து கொள்ள வேண்டுமெனில், இந்த பிரபஞ்சத்தில் ஒரு பகுதியான இந்த பூமியில் காணப்படுகின்ற ஒரு சிலந்திப் பூச்சியை கவனித்தால், அது தன்னுடைய சிலந்தி வலையை பின்ன வெளியிலிருந்து எந்த விதமான மூலப்பொருளையும் எடுத்துவரவில்லை, அது தன்னிலிருந்தே அந்த வலையை பின்னுகின்றது. அதுபோல, அந்த பரம்பொருள் தன்னிலிருந்தே இந்த பிரபஞ்சத்தைப் படைத்தது. ஒரு சாதாரண பூச்சியே எந்தவித மூலப்பொருட்களும் இன்றி வலையைப் படைக்கும்

போது, எல்லாம் வல்ல பிரம்மம் தன்னிலிருந்து படைப்பதை கண்டு ஆச்சரியப்படத் தேவையில்லை.

ஒரு மனிதன் தன்னுடைய உடல் உறுப்புக்களை தனித்தனியாக பார்க்காமல் அனைத்தையும் சேர்த்து இந்த உடலை **'நான்'** என்று எப்படி அழைக்கின்றானோ?

அதுபோல, பிரம்மத்திலிருந்து தோன்றிய இந்த பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் சேர்த்து **"பிரம்மம்"** என்று அழைப்பதற்கு பெரிய வித்தியாசம் ஒன்றும் இருக்க முடியாது.

அவ்வாறு பிரம்மத்தின் படைப்பாகிய பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து கோள்கள், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மற்றும் இந்த பூமி, மேலும் இந்த பூமியில் காணப்படுகின்ற அனைத்து ஜடப்பொருட்களும், உயிரினங்களும் இறைவனே என்றால் அது மிகையாகாது.





# 9. அனைத்தும் அவனே

இதில் முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், மனிதன் எப்படி இறைவன் ஆகலாம் என்ற கேள்வி பலருக்கும் அறியாமையின் காரணமாக உருவாகிக்கொண்டே இருக்கும்.

அவர்கள் அறிய வேண்டிய சூட்சும இரகசியம் என்னவென்றால், அணுவுக்குள் அணுவான அந்த பரமாத்மா ஒன்றே ஒன்றுதான், அது அனைத்து உயிரினங்களிலும், ஜடப்பொருட்களிலும் ஆத்மாவாக நிறைந்துள்ளது. ஒவ்வொரு உயிரினத்திற்கும், ஜடப்பொருட்களுக்கும் தனித்தனி ஆத்மா கிடையாது.

ஒரே ஒரு ஆத்மாவான அந்த பரமாத்மா எங்கும் எதிலும் நிறைந்து இருப்பதனை அறியாமல், நாம் நம் சிற்றறிவிற்கு தோன்றியவாறு கற்பனை செய்துகொண்டு பல ஆத்மாக்கள் உள்ளன என்றும், பல கடவுள்கள் உள்ளன என்றும் அறியாமையினால் அடம் பிடித்துக் கொண்டிருக்கின்றோம்.

சட்டி, பானை, குடம் போன்ற ஜடப் பொருட்கள் இருட்டில் எங்கிருக்கின்றன என்பதைப் பார்ப்பதற்கு விளக்கு ஒன்று தேவைப்படுவது போல, இந்த உலகைப் பார்ப்பதற்கு பயன் படும் கண் என்ற உறுப்புக்கே வெளிச்சம் கொடுக்கும் உள்ளொளி ஒன்று தேவைப்படுகின்றது என்பதை உணரவேண்டும்.

புல், பூண்டு, செடி, கொடி மற்றும் மரங்கள் என்ற தாவர இனங்களிலும், பல்லி, பச்சோந்தி, மற்றும் பாம்பு போன்ற ஊர்வன இனங்களிலும், பறவைகளிலும், மிருகங்களிலும் மற்றும் மனிதர்களிலும் எங்கும் நிறைந்துள்ள ஆத்மாதான் (பரமாத்மா) உள் ஒளியாய் நின்று மனம், புத்தி, இந்திரியங்கள் முதலானவற்றைப் பிரகாசிக்கச் செய்கின்றது என்பதை நன்கு அறியவேண்டும் .

வெளிப்பார்வைக்கு தெரிகின்ற சூரியன், மற்றும் அகல்விளக்கு போன்றவைகளின் ஒளியினால் சுயப்பிரகாஷமான ஆத்மா ஒருபோதும் பிரகாசிக்கப்படுவதில்லை, அது தன்னில் தானாய் ஒளிர்கின்றது என்பதையும். அதுவே எங்கும், எதிலும், ஏன் நம்முள்ளும், வெளியிலும்



நிறைந்துள்ளது என்பதையும் நன்கு உணர்ந்து கொள்ளவேண்டும்.

ஆக அப்படிப்பட்ட பரம்பொருள் ஒன்றுதான் எங்கும், எதிலும், அனைத்து உயிரினங்களிலும், ஏன் தன்னிலும் நிறைந்துள்ளது என்பதை அறிந்து கொண்டு "**ஆதுவே நானாக இருக்கின்றேன்**" என்பதை அறிபவனே அனைத்தையும் அறிந்தவன் ஆகிறான்.

**"தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை**
**தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்**
**தன்னை அறியும் அறிவை அறிந்தபின்**
**தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே"**

என்று ஒவ்வொரு மனிதனின் ஆறாவது அறிவையும் திருமூலர் தூண்டுகின்றார்.

"பல்வேறு பகுதிகளிலிருந்தும் தோன்றும் அனைத்து ஆறுகளும் முடிவில் கடலை அடைந்து, கடலாகவே ஆகிவிடுகின்றன. இனி அந்த ஆறுகளை பிரித்து அறிய முடியாது. அதுபோல, ஒரே பரம்பொருளிடமிருந்து தோன்றிய இந்த

பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து உயிரினங்களையும் பிரித்து அறிய முடியாது".

ஒருவனை கண்ணைக்கட்டி ஒரு காட்டில் கொண்டு போய் விட்டு, அவன் கண்ணைத் திறந்து நீ வீட்டுக்குப்போ! என்று சொன்னால் அவனால் சரியான பாதை அறிந்து பயணம் செய்ய முடியாது.

அப்பொழுது, அந்த பாதை அறிந்த மற்றொரு மனிதன் வந்து அவனுக்கு பாதையை காட்டி அவனுடைய வீட்டுக்குப்போக வழி சொல்லிக் கொடுத்தால் அவன் எப்படி சந்தோஷம் அடைவானோ, அதுபோல ஆத்ம ஞானத்தை அறியாத பாமரனுக்கு சரியான பாதையை காட்டிக் கொடுக்க **ஆத்ம ஞானத்தை அடைந்த** குரு கிடைத்தால் அவனும் சந்தோஷம் அடைவான்.

**முற்றும்.**







